# நிட்டானுபூதி சாரம்

ஞானியார் மடாலயம்,
திருப்பாதிரிப்புலியூர்.

உ
சிவமயம்
சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன்
திருவடி வாழ்க

# நிட்டானுபூதி சாரம்

நூலாசிரியர் :
திருக்கைலாய பரம்பரை
திருக்கோவலூராதீனம் ஸ்ரீமத் ஞானியார் மடாலயம்
பிரதம குருமூர்த்திகள்
ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்



சாது அச்சுக்கூடம்,
இராயப்பேட்டை,
சென்னை.
ஸ்ரீமுக வைகாசி மூலம்

# முன்னுரை

திருக்கைலாய பரம்பரை, திருக்கோவலூ ராதீனம்

ஸ்ரீமத் ஞானியார் மடாலயம்

## ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்

அறுபதாமாண்டு நிறைவாகிய

ஸ்ரீமுக வைகாசி 27 மூலத்திருநாளில்

பரமாசாரிய சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய

இந்நிட்டானுபூதிசாரம்

அச்சுவாமிகளின் அநுக்கிரகம் பெறுதற்காக

அச்சிடப்பெற்றது.

# உள்ளுறை



# நூலாசிரியர் வரலாறு

பெயர் :—[1]பரசிவ மகாலிங்கேசுரர், பரமாசாரிய சுவாமிகள், மகா குருசுவாமிகள், சண்முக நாம சத்ய ஞான சிவாசாரிய சுவாமிகள், ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள், ஆறுமுக மெய்ஞ்ஞான தேசிகர், சண்முக மெய்ஞ்ஞான தேசிகர், [2]ஆறுமுக நமசிவய மெய்ஞ்ஞான சிவகுரு, [3]ஞானியார் சுவாமிகள்.

முன்னையோர் :— [4]ஆத்துமகூரில் சோமநாத ஆராத்திரியர் சந்ததியில் உதித்த மல்லைய தேவர் பிரமர குந்தளாம்பா என்போர் ஆசிரியரின் பாட்டனர் பாட்டியாராவர். சுப்பிரமணிய அய்யர் சுப்பம்மா என்போர் பிதா மாதா ஆவர்.

அவதரித்த ஊர் காலம் :—திருக்கோவலூரில் கலி 4774 ஆநந்தஹு கார்த்திகை மாதம் கிர்த்திகா நக்ஷத்திரம் [5]"ஆயிரநான் கேழுநூ றத்தோ டெழுபதுநான், காயகலி ஆநந்த வாண்டருணைத்—தேயுவொளி, ஆன

---

[1]இப்பெயர் பரிபூரணம் அடைந்தபின் வந்தது.

[2]இது ஆரூமுறை குகை நமசிவாய சுவாமிகள் சொல்லியது.

[3]உலகிலுள பக்குவர்க்கு ஞானோபதேசம் செய்பவரிலாது ஆரூ முறை குகை நமசிவாய சுவாமிகளும் பக்குவிகளும் வருந்திய காலம் அவ்வருத்தத்தை யகற்றி ஞானோபதேசம் பக்குவிகளுக்குச் செய்துவந்தமையால் எய்திய பெயர்.

[4]கர்நூல் சில்லாவில் உள்ளது.

[5]இரண்டாமுறைச் சுவாமிகள் செய்தது.

தினம் கோவலில்வா மூறுமுக தேசிகனுர், மானிடர் போல் வந்ததின மாம்.''

அனுக்கிரக வரலாறு:—சிவலிங்க தாரணமும் தூல பஞ்சாக்ஷர உபதேசமும் ஆறுமுறை குகை நமசிவாய சுவாமிகளாலும், சூக்கும பஞ்சாக்ஷரம் பெரிய நாயகி அம்மையாராலும், காரண பஞ்சாக்ஷரம் ஆராத்திரிய வுருவமாக வந்த இறைவனுராலும், மகா காரண பஞ்சாக்ஷரம் வீரபத்ரராலும், பாவனுதீத ஒரு வார்த்தை உபதேசம் வீரட்டேசுரராலும், பிரணவோபதேசம் [1]முருகக் கடவுளாலும் பெற்றனர்.

"[2]தூலவை வனமு மிலிங்கமுங் குகையோன்
சூக்கும முமையுரு வாகி
மேலதா மிறைகா ரணமுமா ராத்யன்
மிகுமகா காரணம் வீரன்
சீலமாம் ஞானே பாயசா தனையைத்
தெரித்தவீ ரட்டர்செந் நெறியின்
மேலிலா துண்மை யீதென மொழிந்த
வேலவ னிணையடி பணிவாம்''

சககாலத்தவர்:—ஆறுமுறை குகை நமசிவாயசுவாமிகள். ஒன்பதா முறை குரு நமசிவாய சுவாமிகள். விருத்தாசலம் குமாரதேவ சுவாமிகள். போரூர்ச் சிதம்பர சுவாமிகள். கும்பகோணம் ஏழாமுறை சாரங்கதேவ சுவாமிகள், பொம்மைய பாளையம் இரண்டாமுறை பாலைய சுவாமிகள். செஞ்சி கோட்டுரையர்..

---

[1]இம்மூர்த்தியே இவ்வாதீன உபாசன மூர்த்தி.
[2]இரண்டாமுறைச் சுவாமிகள் செய்தது.

நரசிங்கபுரம் பொக்கிஷா தேவர். பாதிரி ஞானம்பா முதலியோர்.

சீடர்கள் :—[1]அம்பலவாண சுவாமிகள். [2]அவிநாசி நாத சுவாமிகள் [3]மதுரைச் சட்டை முனிகள் முதலியோர்.

செய்த நூல்கள் :—நிட்டானுபூதி சாரம் முதலிய நூல்கள். இவற்றின் பெயரும் செய்யுட்களின் எண்ணும் viii-ம் பக்கத்திற் காண்க.

நிட்டானுபூதிசாரம் செய்த காரணம் :—[4]ஆவணி மாதம் குருவாரம் தசமிமூலங் கூடியநாளில் திருக்கோவலூரில் பெண்ணை யாற்றினடுவில் கபிலர் குன்றினடியில் சிவபூஜை செய்தமரும்போது ஸ்ரீ பிரஹந் நாயிகா சமேத வீரட்டானேசுரர் பாவனாதீத ஒரு வார்த்தை உபதேசம் செய்து, உத்தரவாதுளாகமம் இருபத்தெட்டாம் படலமாகிய வடமொழி நிட்டானுபூதி யெனும் முறையைச் சுவாமிகளது மடித்தலத்திருத்தினர். ஆரூர் முறை குகை நமசிவாய சுவாமிகள் இவ்வரலாற்றைக் கேள்வியுற்றுத் தமிழில் மொழி பெயர்த்தருள்க என்றனர். சுவாமிகள் நிட்டானுபூதிசாரம் எனப் பெயரிட்டு மொழி பெயர்த்தனர்.

பரிபூரணம் :—அவதாரமான ஆநந்த ஆண்டிற்குத் தொண்ணூற் றேழாவதாண்டாகிய விகுர்திஸு மாசிமீ

[1]வேதாந்தசாரத்திரட்டு முதலிய நூல் செய்தவர்.

[2]நெஞ்சுவிடு தூது முதலிய நூல் செய்தவர்.

[3]'விண்ணுறு கயிலை' பதிகஞ் செய்தவர்.

[4]இன்றும் இந்நாளில் திருக்கோவலூரில் வீரட்டேசுரர் பெரியநாயகி அம்மையாரோடு மடாலய மண்டபத்திற் கெழுந்தருளி உற்சவம் கொண்டருளுகின்றனர்.

உளவ வியாழக்கிழமை அனுஷ நட்சத்திரங் கூடியா
நாள்.

[1]கலியெழுபத் தெண்சதசா கச்சிர நான்காண்
டொலிவிகுர்தி மாசிமூ வொன்பான்—சொலுகுருவா
ரத்தினத்திற் கோவலில்வா ழாறுமுக தேசிகனுர்
சித்தாய் நிறைந்ததெனத் தேர்.

பின்வந்தோர் :—இரண்டா முறை சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் அறுபத்து மூன்று ஆண்டு ஆசாரியராக எழுந்தருளி நந்தன வருடம் கார்த்திகை மாதம் மூன்றும் மங்கள வாரத்தில் பரிபூரண மடைந்தனர். மூன்றுமுறை சிவசண்முக சங்கண வசவ மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் பதினறு ஆண்டு ஆசாரியராக எழுந்தருளிக் கீலக வாண்டு புரட்டாசி மாதத்தில் கடைசிச் சோமவாரம் பரிபூரண மடைந்தனர். நான்காமுறை சிவசண்முக பரசிவ மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் நாற்பத்தொரு வருடம் ஆசாரியராக எழுந்தருளி நாற்பத்திரண்டாம் ஆண்டு விரோதிஞ ஐப்பசிமீ 26உ ஞாயிறன்று பரிபூரண மடைந்தார்கள். பிரதம மூர்த்திகள் திருக்கோவலூரிலும் மற்றை மூவரும் திருப்பாதிரிப்புலியூரிலும் பரிபூரணம் அடைந்தனர். பிரதம குருமூர்த்திகள் சரிதம் விரிவாக விரைவில் வெளிவரும்.

---

[1]இரண்டாமுறைச் சுவாமிகள் செய்தது.

உ

# இவ்வாசிரியர் இயற்றிய நூல்கள்



| | |
|---|---|
| நிட்டானுபூதிசாரம் | ... 91 |
| வீரசைவ வுண்மை யகவல் | ... 1 |
| ச்துர்லிங்க தசகோத்ரசதம் | ... 113 |
| இஷ்டலிங்கத் திருத்தல்மாலை | ... 17 |
| சிவசோடசமாலை | ... 16 |
| ஆசைச்சோடச மாலை | ... 16 |
| உய்யப்பத்தி | ... 10 |
| ஓலப்பத்தி | ... 10 |
| கரதலப் பதிகம் | ... 10 |
| கரதலநாயக பஞ்சகம் | ... 5 |
| இஷ்டலிங்கப் பதிகம் | ... 10 |
| கரதலத் திருப்புகழ் | ... 3 |
| ஆடுதுறைக் குற்றம் பொறுத்தார் தோத்திரம் | ... 4 |
| சண்முகருலா | ... 120 |
| தென்பாங்கு | ... 10 |
| மாசிலாமணிப் பதிகம் | ... 11 |
| சிவசிவ பதிகம் | ... 11 |
| சிவசிவ ஹரஹர பதிகம் | ... 11 |
| வீரட்டேசுவர மஹாகுரு அனுபவ தோத்திரக் கலித்துறை | ... 12 |
| லிங்கப் புலம்பல் | ... 219 |
| அருள்வாம வுண்மை விளக்கம் | ... 113 |
| பிரம தர்க்க நிச்சயம். | ... 22 |
| வெற்றருலா | ... 47 |
| உண்மையுலா | ... 113 |
| பரமவுபதேச ஒடுக்கம் | ... 82 |
| சிவாத்வைத கும்மி | ... 27 |
| ஞானிகள் நிலைமை | ... 8 |
| மேன்மைப் பதிகம் | ... 12 |
| வீரட்டேசுர தோத்திரக் கலிப்பா | ... 16 |
| சண்முக ரகவல் | ... 1 |
| வீரட்டேசுர மஹா குரு தோத்திர மங்களம் | ... 5 |
| ஆகச் செய்யுள் | 1146 |

சிவமயம்

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன்
திருவடி வாழ்க

# நிட்டானுபூதி சாரம்

## காப்பு

அத்தி முகனடி
நித்த நினைபவர்
சித்தி திருவொடு
முத்தி பெறுவரே. க

## கடவுள் வாழ்த்து

### வீரட்டேசுரர்

சீர்பூத்த செஞ்சடையிற் சுரநதியுங் கரமதியுஞ்
செறிந்தி லங்க
வார்பூத்த குயவனிதை யொருபுறத்திற் பசங்தொளிர
வாரி யுண்ட
கார்பூத்த மணிவண்ணன் கட்கமல மிணக்கமலக்
கழலின் மேவ
வேர்பூத்த கோவலில்வாழ் வீரட்டத் தொருமுதலை
யிறைஞ்சு வாமே. உ

## பெரியநாயகி

அரியநா யகியளவைக் கனுதினமு நெக்குருகு
மடிய ரன்புக்
குரியநா யகியெங்குந் தானுகி நீங்காம
லொளிரா நின்ற
கரியநா யகிகோவற் பிரானிடத்தி லெப்போதுங்
கலந்து வாழும்
பெரியநா யகியுபய பதமலரை யனுதினமும்
பேணு வாமே. ௩

## பெரியானைக் கணபதி

### வேறு

அரியானை யயன்மாலுக் ககண்டபே ரொளியானைத்
தெரியானை யன்பிலர்தந் தேகமன வாக்கதனுக்
குரியானை யன்பர்தமக் குயர்பெரியா னின்றெடுத்த
பெரியானைக் கணபதியின் பிறங்கியபொற் பதம்பணிவாம். ௪

## முருகக் கடவுள்

### வேறு

கடல்சுவற நெடுமாயக் கிரிவீழச் சூரனுரங்
கலங்கச் செம்பொன்
மடலவிழ்கற் பகநீழல் வலாரியும்வந் தரசிருப்ப
மகங்க ளோங்க
விடலரிய விபுதர்சிறை விடமுனிவர் செய்தவங்கள்
மேலு மோங்க
வடல்கெழுவே லேவியவோ ராறுமுக னடியிணையை
யகத்துள் வைப்பாம். ௫

## திருநந்திதேவர்

### வேறு

மூந்துசஞ் சிதங்க டீர மும்மலக் கங்குல் பாற
வந்தியும் பகலு மில்லா வாதித்த னகத்திற் றோன்ற
விந்தியம் புலன்கண் மாய வின்பவா ரிதியின் மூழ்க
நந்தியெம் பெருமான் பாத நளினமெஞ் சிரமேல் வைப்பாம்.

## சைவசமயாசாரியர்

### வேறு

அடிபணிவே னுமைசுவர்க்கத் தமுதையயின் றினியகவி
    யமுதந் தந்தோ
னடிபணிவேன் பவக்கடலு மூவர்க்கடலுங் கடந்தவாக்
    கரசின் செங்கே
முடிபணிவேன் பரவைபாற் பரசிவனைத் தூதாக
    வனுப்பு வித்தோ
னடிபணிவேன் றிருவாத வூரடிகள் புகழேத்தி
    யன்பிற் றனே. எ

## வசவதேவர், சேன்னவசவதேவர்

சிவசமயப் பயிர்தழையப் பரசமயக் களைநீவத்
    திகழ்வே தத்தோ
டுவமையிலா கமநீதி யோங்கவரும் வசவணர்தா
    ளுவந்து போற்றி
யவமறுமா றங்கலிங்கங் கலைமுகஞ்சா தாக்யபத்தி
    யத்தஞ் சத்தி
இவைகளொரு வடிவாய சென்னவச வேசர்பத
    மிறைஞ்சு வாமே. அ

## குகை நமசிவாயதேவர்

### வேறு

அன்னமயம் பிராணமய மனோமயவிஞ் ஞான
  வானந்த மயத்தினுட னைங்கோச மாய
வின்னமய னீங்கியமெய்ஞ் ஞானியுளங் குகையா
  யெப்போது நீங்காம லிசைந்துமிக வாழ்வோன்
பன்னரிய விரிவுயரஞ் சமனதிக மிவைகள்
  பகர்வரிதாய்ப் பிரமன்முதற் பண்ணவர்த முளத்தி
லுன்னரிய வோநமசி வாயகுரு ராய
  னுபயசர ணமதுளத்து முச்சியினும் வைப்பாம்.

## குருநமசிவாயர், சிவசரணர்

### வேறு

சீலமிகுங் குகைநமசி வாயர்கர சாதனராய்த்
  திகழு மன்பாற்
பாலினுறு சுவைபோலப் பனுவலவர் மீதுமம்
  பலவர் மீதுங்
கோலமுட னேசெய்யுங் குருநமசி வாயர்பதங்
  குழைந்து போற்றித்
தாலமிசை நிலவவருஞ் சிவசரண ரனைவரையுந்
  தாழ்ந்துய் வாமே. ௧௦

## அவையடக்கம்

பத்தியங்கங் கொடுசெய்யும் பூசனையு மறையாதி
  பகரும் வண்ண
மித்தரணி மிசைச்செய்யும் பூசனையும் யானைமுத
  லியற்ற லைந்து

சுத்தியின்றிச் செயும்பூசை யலதறியா சீசிதான்
சுழற்றி வீசு
மத்தனிக்கூ விளப்பூசைக் கிரங்கலினு லியான்பாட
வகமுற் றேனே. கக

வாருங்கள் வையகத்தீர் யான்கீர வாரிதியை
வள்ளத் தாலே
பாருங்க ளளந்தீவே னீங்களுநன் குயருந்திப்
பாலி னுசை
தீருங்க ளென்றொருவன் செப்புதல்போற் சிவயோக
நிட்டை தன்னை
நீருங்கோ ளரவுமணி யண்ணன்மொழிப் படியேயா
னிகழ்த்த குனே. கஉ

## சிறப்புப்பாயிரம்

அத்தனுர் தமைக்கயிலை யிடத்துமையாள் வணங்கிமகி
தன்பிற் கேட்ப [ழ்ந்
வுத்தரவா துளந்தன்னி னுலேழாம் படலத்தி
னுண்மை ஞான
முத்தியினை யுதவுநிட்டா வனுபூதி தனையெடுத்து
மொழிந்தா னத்தை
யித்தலனின் மிசையாறு முகற்கருள வவன்றமிழா
லிசைத்தா னன்றே. கங

## நூல்

நித்தனை யுமையா ளடிபணிந் தெனக்கு
நிட்டைசா தனைநிகழ்த் தெனவே
யத்தனு மகிழ்ந்தே நீவினு விடுத
லாருயிர்த் தொகைகண்மெய் யுணர்வான்
முத்தியை யடையுங் காரண மாமான்
மொய்குழற் செய்யவாய்ப் பசுந்தோள்
வித்தகி சாவ தானமாய்க் கேட்டி
யென்றிறை விளம்பிடு மன்றே. கச

ஒருமொழி யாலே சுருதியா கமநூ
லுயர்புரா ணமுமெலா மொழியு
மொருமொழி யாலே சரியைநற் கிரியா
யோகபா வனையெலா மொழியு
மொருமொழி யாலே யண்டபூ தங்க
ளொடுங்கிடுந் தன்னிலை தோன்று
மொருமொழி சும்மா விருத்தலா மதனு
லொப்பிலாச் சிவபத மடைவார். கரு

### வேறு

சரியையின் றொழிலி னுலுஞ் சற்கிரி
யையினும் யோகம்
புரிதரு முயற்சி யானும் பொருந்தொணு
தென்பர் மேலோ
ருரியதே சிகனு ரைக்கு மொருமொழி
யுண்மை யாலே
யரியமெய்ஞ் ஞான வீடிங் கடைவது
திண்ண மாமே. கசு

வேறு

கட்டறத் துறந்தே யுயிர்பொருட் சார்பைக்
 கருதிடும் வாசனை யனைத்து
மொட்டற விடுத்து ஞானநூ லனைத்து
 மோர்ந்திடி லென்பய னுதவு
மெட்டுதற் கரிய சற்குரு வருளா
 லியம்புமோர் மொழியினைப் பெற்றே
நிட்டைசா தித்தே சகலகே வலங்க
 ணீங்கிடிற் பிறப்பிறப் பறுமே. கஎ

வித்தக மாகப் பலகலை பயின்று
 மேவுநற் பயன்களை யறிந்துந்
தத்துவ முழுதுங் கசடற வுணர்ந்துந்
 தன்னிலை யறிவதற் கரிதாஞ்
சுத்தமெய்ஞ் ஞான தேசிகன் மகிழ்ந்தே
 சொல்லாமற் சொல்லுமோர் மொழியா
முத்திரை மோன நிலையினு லன்றி
 முத்தியி னிலைகிடை யாதே. கஅ

வேறு

முத்தி ரைகளோர் மூன்று மொழிந்திடிற்
சுத்த சாம்பவி சொல்லும் பைரவி
மெத்து கேசரி யென்று விளங்கிடு
மித்தை யார்க்கு மியம்பவொண் ணாதரோ. ககூ

முத்தி ரையை மொழியப்போ காதுகா
ணுத்த மர்க்கே யுரைக்கும் பொருளது
புத்தி யீனர் புலம்பி மயங்கியே
பித்து மேல்கொடு பிதற்றுவர் பேயரே. உ0

## வேறு

இந்தநன் னிலையி லிருந்துசா திக்தோ
ரெவரென வுமையவள் வினவச்
சுந்தர வாம தேவமா முனிவர்
சுகர்முதன் முனிவரென் றறிதி
கந்தடு கரியின் கையினைப் புறங்காண்
கவானுடை மலைதரு மயிலே
நிந்தையி னிட்டைக் குரியவா தனமு
நிகழ்த்துவ னன்புட னீகேள். உக

உத்தர திசைபார்த் திருப்பதாங் கலையி
னுரிவையோ டுழுவையி னதளுஞ்
சித்திரா தனம்வெண் டுகில்குசை யைந்துந்
திண்புவி மிசைவிரிப் பனவாம்
பத்திரம் வீரங் குக்குட மரிய
பங்கயங் கோமுக மைந்தும்
வித்தக மான வங்கவா தனமாம்
விமலைநீ யறிகென விளம்பும். உஉ

இயம்புமா தனங்க டம்மிலொன் றுறவே
யிடைகளுஞ் சிரங்கணு னேராய்
வயம்பெறத் தம்ப மெனநிறீஇ யிருந்தே
மனமது வடிவினை யுறும
னயம்பெற வுன்று துன்னியெப் போது
நடுநிலை தன்னைநீங் காமற்
றயங்கிய சுத்த மசுத்தமல் லாத
தனிநிலை பொருந்துதல் சமாதி. உங

## வேறு

விண்ணை மூடக் கவிசனையை விரிக்கு
மொருவன் விரகதெனப்
பண்ணும் யோகத் துறநினைவோன் பவனற்
றடுக்கு மதுவிடுத்தே
எண்ணுங் கருத்தை முன்னடக்க வியங்கும்
வளியும் பின்றொடுங்கும்
கண்ணை மறைக்க வான்மறையுங் கணக்காம்
படிநீ கண்டுகொள்ளே. உச

அலையு மனத்தை யகத்தடக்கு மவனே
சரியை கடந்தோனு
மலையு மனத்தை யகத்தடக்கு மவனே
கிரியை முடிந்தோனு
மலையு மனத்தை யகத்தடக்கு மவனே
யோக தற்பரனு
மலையு மனத்தை யகத்தடக்கு மவனே
ஞானி யதிசூரன். உரு

அடக்கிக் கருத்தி னலைவறுப்போ னவனே
சகல தியாகியா
மடக்கிக் கருத்தி னலைவறுப்போ னவனே
பொன்றுப் பொருளுடையோ
னடக்கிக் கருத்தி னலைவறுப்போ னவன்பே
ரின்ப வனுபவியா
மடக்கிக் கருத்தி னலைவறுப்போ னவன்வீட்
டின்ப மடைபவனே. உசு

வெறிகொள் குரங்கு மயக்குஞ்சொல் விளம்பி
யருந்தி ஞலதுவு
நெறிதான் மயங்கிச் சுழல்வதுபோ னிமிடந்
தானு நிலாமனத்தைக்
குறியில் சமாதி யெனுங்கயிற்றாற் குறுகப்
பிணிப்போ ரெவரவர்தா
மறிவோ டறியா மைகளிறந்த வரிய
முத்தி தனையடைவார். ௨எ

வேறு

பங்கயா தனத்திற் படியவே யிருந்து
பரமசற் குருவினைத் தொழுதே
யிங்கிரு விழியும் விசும்புற நிறுவி
எழுங்கருத் தினையக மாக்கி
யங்குறு நிலையா லடங்கிடா மனத்தி
னலைவறுத் தறிவறி யாமை
துங்கமா யொழியச் சாதனை புரிந்தே
தூங்காமற் றூங்குக மாதோ. ௨அ

ஆதனத் திருந்தே சாதனை புரிந்தா
லடங்கிடாப் பொறிபுல னெடுங்கு
மாதனத் திருந்தே சாதனை புரிந்தா
லடங்கிடு மனேவிட யங்க
ளாதனத் திருந்தே சாதனை புரிந்தா
லறிவறி யாமைக ளொழியு
மாதனத் திருந்தே சாதனை புரிந்தா
லகண்டவீ டடைவது நிசமே. ௨௯

வேறு

உலையாப் பொறியைம் புலனடக்கி
ஒன்று மனத்தி லுன்னாதே
தலையா கியபே ரானந்தந்
தலைப்பட் டதனிற் றூன்மூழ்கி
யலையா யோக மம்புவிடு
நேர மரைமாத் திரையேனு
நிலையா நிற்போர் வீடடைவர்
நிலத்திற் பிறவா ரிறவாரே. ௩௦

நிட்டை நிலையீ தென்றுரைப்பர்
நிகழும் வாயு தாரணையை
நிட்டை யதுதா னலதென்றே
நிலவு மேலோர் புகலுவரா
னிட்டை யாதல் கருத்தடங்க
நிறுத்த லதுவே சிவயோக
நிட்டை விடாது சாதிப்போர்
நித்த மெய்வீ டுறுவாரே. ௩௧

வேறு

நிட்டை சாதித்தா னீங்குமைம் பொறியொடு புலனு
நிட்டை சாதித்தா னெஞ்சமு முளத்திடை யொடுங்கு
நிட்டை சாதித்தா னினைப்பொடு கேவல மொழியு
நிட்டை சாதித்தா னிமலவீ டடைவது நிசமே. ௩௨

வேறு

நீங்காக் கருத்தை யகத்திருத்தி நிகழ்சாம்
பவியாற் ககனமுற
நீங்கா நிட்டை சாதித்தா னீங்கும்
பொறியைம் புலன்கரண

நீங்கா நிட்டை சாதித்தா னினைப்பு
மறப்பு மறநீங்கு
நீங்கா நிட்டை சாதித்தா னித்த
முத்திப் பேறடைவார். ௩.௩

வேறு

உத்தர முகமா யாதனத் திருந்தே
யுயர்குரு பதமலர் தொழுதே
முத்திரை எனுஞ்சாம் பவியினைப் பொருந்தி
மோனமா மங்கிலே வழாமற்
சித்திர தீபம் போலசை வறவே
சிந்தையி னசைவறப் பவனே
அத்தன தடியை யடைவனென் றுரைக்கு
மண்ணலா கமமெலா மெடுத்தே. ௩.௪

வேறு

இருந்தான் சமாதி போலென்றே இந்த
வுலகோ ரியம்பவுங்கேட்
டிருந்துஞ் சமாதி தனிலுழையா தென்றோ
வென்போ லிருந்தானே
யிருந்தான் சமாதி தன்னிலேயி லிருந்தே
யிலாமை தனைநீக்கி
யிருந்தா னவனே யிருந்தானே யின்ப
மளவி லின்பத்தே. ௩.௫

வேறு

அருந்துபோ னகமும் பாதியா நீரு
மதனினும் பாதிய தாகப்
பொருந்துநா ளொன்றுக் கொருபொழு தருந்தல்
புரிகமற் றெவ்விடத் தெனுந்தா

னிருந்திடி னும்பி னெழுகினும் புவிமீ
தேகினு மாதர்க டம்மைப்
பரிந்துகூ டினுமெய்ஞ் ஞானமுத் திரையிற்
படிவது யோகிதன் பரிசே. ௩௬

இத்திற மான யோகசா தனையி
லிருந்துசா திப்பவர் தமக்குச்
சுத்தமா நாதத் தொனிகளும் பலவாத்
தோன்றிடு மணிகடன் மேக
மத்தளம் பேரி யாழொலி சிலம்பு
வளையளி தாளமென் றுமையாட்
கத்தனு மொழிந்தா னன்றியு முரவோ
ராய்ந்தெடுத் துரைத்தன ரன்றே. ௩௭

ஒத்தவந் நாதந் தோன்றிய பொழுதே
யொலியினா லுயர்ந்தெழு படம்போற்
றத்துவஞ் சகல கேவல நீங்கித்
தனையறி பவர்க்கிலை மூட
மித்திற மலாது சகலத்து மெய்தா
திரும்பர கேவலத் தடையா
மத்தியத் தந்த மூடமே யுற்றால்
வகையதற் குரைக்குது மன்றே. ௩௮

துன்னிய வந்த மூடநீங் கிடமெய்த்
தூயசற் குரவனைத் தொழுதே
மன்னுகா ரணமா மனுவினைப் பெற்றே
மனம்விட யத்துறா திருந்தே

யங்஦ிலே பதினா யிரந்தாஞ் செபிக்க
வகன்றிடு மகன்றிடா தாறுமேற்
பின்னுமச் செபத்தை யொருபதாண் டளவும்
பெட்புடன் செபிக்கநீங் கிடுமே. ௩௯

இந்தமெய்ச் செபமுங் குருபதத் தன்பு
மிடைவிடா தேயுளூற் றுவரேல்
வந்திடுஞ் சனனந் தன்னிலே யுறுவர்
மன்னுமெய்ஞ் ஞானநிட் டையினை
யுந்துமம் மூட மிலாதவர் தம்மை
யுத்தம பக்குவ ரெனலா
முந்துசற் குரவ னல்குமுத் திரையான்
மோனவீ டுறுவர்க ளன்றே. ௪௦

இயம்புநன் னிலையி னிட்டைசா திப்போர்க்
கினனொளி கோடிக ளொன்றாய்
வயங்குவ போல வகக்கணிற் றோன்று
மற்றதும் பொருளல வென்றே
தயங்குற வெந்தை யுமைக்குரைத் திடவே
தலைவிகேட் டதனைநீ தெளிய
நயம்பெறப் புகறி யென்னவே வினவ
நாதனுந் தெளிவுற நவிலும். ௪௧

இலங்கிய மோன முத்திரை யதனி
லிருந்திடும் பொழுதிலைம் புலனி
னலந்திகழ் மூன்று புலனொடுங் கிடுமா
னவிலவை யெவையெவை யென்னிற்

றுலங்கிய ரூப மிரதநற் கந்த
மென்றுசொற் றிடுவர்மற் றிரண்டு
புலன்களிற் பரிசந் தரிசனத் தொன்றிற்
போயிடு மென்பர்புண் ணியரே. சஉ

வேறு

பேசரிய வனுபோக மாகுங் காலைப்
பிறங்குசத்தத் தக்கரங்க டோன்று மாயி
னீசமாம் பொறிபுலன்க ளவையுந் தோன்று
நிலவுபொழு தகமுகம தாக வுய்த்தே
பாசமிறே சிகன்முன்னம் பகர்ந்த வாறே
பதுமவா தனமும்பார் வையுநீங் காம
லாசிலந்நி லையிலுறவஞ் செழுத்து மில்லென்
றறையக்கேட் டாகநிற்கும் வகையைச் சொல்வீர்.

வேறு

நகரமொடு மகரமது சடந்தருகா ரணமா
நாடுமவை நீங்கியிடும் வகையைநவி லுதுங்கேள்
வகரத்தி னகரமுதல் யகரத்திற் றனே
மகரமுநீங் கிடுமரிய சிகரமனுத் தன்னால்
யகரலயம் வகரமுந்தான் சிகரத்தி லொடுக்க
மாகுமிறை நீங்கவுயிர் முத்தியெய்து மென்றே
தகரநறுங் கரியகுழ னகமாதுக் கிறைவன்
றனதுதிரு வுளமகிழச் சாற்றினனன் குணர்ந்தே.

வேறு

ஆதனத் திருந்தே சாதனை செயும்போ
தலைதரு மனமடங் காமற்
போதுமே யெனினுங் கேவல மயக்கம்
புரியுமே யெனினுமங் கெழுந்து

நீதியி னையி ரடியுள் வந்தே
நிலவுமா தனத்தினிற் பொருந்தி
யோதுசா தனையி லுறுதியோ டிருப்ப
தியோகியர்க் கியல்பதா மன்றே. சடு

வேறு

இந்நிலையா கியபரம கேவலத்தி னூரு
மெழுநிதித்தி யாசனத்தி விராமலிருந் திடுவோ
னந்நிலையே யுடலினொடு சீவன்முத்தி யடைவ
னதுவும்மெவ் விதமென்னி லறைகுதுநீ கேளாய்
துன்னியதோ யத்தினொடு தோயமுறல் போலுஞ்
சுவைதருகீ ரத்தினொடு கீரும்போற் கலந்தே
யெந்நிலையுந் தோன்றாம லிருந்திடவிவ் வுலகி [வான்.
லிறப்பினொடு பிறப்புமறுத் தினையிலின்பத் தொளிர்

வேறு

அறைவேன் பஞ்சாக் கரவிதியை யதுதான்
றால சூக்குமமா
முறவே திரோப மாதியா யுயிரீ
றுத றாலமதா
மிறைமுன் னுக மலம்பின்னு விசைத்தல்
சூக்கு மம்மிவைகண்
முறையே சமய குருஞான குருவான்
மொழியப் படுங்காணே. சஎ

வேறு

பதின்மரி லொருவர் நூற்றினி லொருவர்
பகருமா யிரத்தினி லொருவ
ரதிகமா மிலக்கந் தன்னிலே யொருவ
ரரியகோ டிகளினி லொருவர்

கதிதரு சூக்க வஞ்செழுத் தினையே
 கருதிடு பவர்களென் றறிதி
விதிதரு பருவத் தவர்கள்கா ரணத்தை
 விளங்குறச் செபித்திடத் தகுமால். சஅ

இந்தவஞ் செழுத்தி விரண்டெழுத் தொழிப்ப
 தெவ்வித மெனவுமை வினவ
வந்தமி லின்ப துன்பமே தனையி
 லழுத்துவ திரண்டெழுத் தாமால்
சிந்தனைக் கரிய சிவமிரு பாலாய்ச்
 சேருயிர் நடுவணே யிலங்கு
மைந்தெழுத் தினையே காரண மெனலா
 மதுமுத்திக் குறுதுணை யாமால். சகூ

வேறு

விதிசேர் பஞ்சாக் கரந்தன்னை விளங்க
 வுரைத்தோ மேலியம்பல்
பதியின் மனுவா மதையுளத்திற் பதித்தோர்
 பரம பதமடைவர்
கதிசேர் செபமு நீங்காதோர் கருதும்
 பலனே யடைவரென
மதிசேர் சடையெம் மண்ணலுமை மகிழ
 வுரைத்தான் வாய்மலர்ந்தே. ருo

சினத்தி னிடத்து மூவகையினுஞ் சிநேக
 னிடத்து மனையிடத்து
மனத்தா மொழியிற் கரத்திடையி னடரு
 ஞமலி யிடையினுந்தா

னெனைத்து நழுவ விடாதகத்தி னிடையே
யுய்ப்பா னிறையெழுத்தை
மனத்துக் கரிய யாமவனே யென்றான்
பரமன் மலைமகட்கே. ருக

வேறு

பதியெழுத்தை விடுத்தவர்கள்
பண்ணும்பூசை யவமாகும்
பதியெழுத்தை விடுத்தவர்கள்
பண்ணுஞ்செபமோ வவமாகும்
பதியெழுத்தை விடுத்தவர்கள்
பண்ணுந்தவமோ வவமாகும்
பதியெழுத்தை விடுத்தவர்கள்
பண்ணுமறங்க ளவமாமே. ருஉ

வேறு

இந்நிலையா மிறையெழுத்தை யுளத்தடக்கு மவனே
யிவ்வுடம்பி னுடனிருந்து மிலங்குபர கதியை
யந்நிலையே யடைவனென வண்ணன்மலை மாதுக்
கறைந்தனனு லதுவுமோ ராண்டுளத்து ளடக்குந்
தந்நிலைமை யுடையவர்க்குப் பரகுரவன் மகிழ்ந்தே
சாற்றுகமா காரணத்தைத் தனதுளத்து ளடக்கா
நன்னிலையாம் பக்குவரல் லாதவர்க்குத் தானே
நவின்றிடவொண் ணாதெனவே நவிலுவர்நல் லவரே.

வேறு

ஞானதே சிகன்மா காரணப் பொருளை
நவிலுதற் குரியவ னுமா
வீனமாம் பொருளி னிச்சையா லிதனை
யியம்புவோன் றேசிகப் பதரா

மோனதே சிகனே முத்தியின் பொருளை
மொழிகுவ னருளிறை முடிவி
லானதே சிகன்மா காரணந் தன்னை
யருளுவ னுகம வழியே. ருச

### வேறு

அஞ்செழுத் தின்விதி யெவ்வித மென்னி
லரிய தூலமொடு சூக்கும மதுதான்
பிஞ்செ ழுத்தினைத் தள்ளியே னின்ற
பெரியெ ழுத்தினைப் பினுமுனு நிறுவி
யெஞ்ச வில்லுயிர் நடுவினி னிலவ
விசைத்தல் காரண மாகுமென் றறிதி
யிஞ்சு நல்லரு ளிறையதா மிதனை
விளங்கு பக்குவர்க் கருள்வது விதியே. ருரு

### வேறு

இப்படி யாய வுபயநன் மனுவை
யெழிற்குரு வருளிடப் பெற்றுச்
செப்பருஞ் செபமுஞ் செபியாது செபிக்கச்
சிந்தையு மோயும தோய்ந்தா
லப்படி தானே யாதனங் கட்டி
யசைவற விருப்பதே நிட்டை
துப்புறு கரண மசையுமே யானுற்
றுரிசுள வநிட்டையென் றுணரே. ருசு

இந்நிலை முத்தி யடைந்தவர் சனன
மெடாதொழித் திடுவரே யானுன்
முன்னமோ திடுமம் மூடநீங் காதோர்
முத்தியை யுறும்வகை யுரையென்

றுன்னியே யுமையாள் வினவலு மவன்று
றுற்றசா தனையைநீங் காது
மன்னியே யிறந்தான் மறுசன னத்தில்
வளமைவீ டுறுவரென் றிசைத்தான். ருஎ

உற்றமெய் நிட்டை சாதனை விடாதோ
ருறுவர்நன் முத்தியை யென்று
மற்றவம் மூட நீங்கிலர் முத்தி
மறுபவத் துறுவரென் றுரைத்தீர்
குற்றமி னிட்டை யடையுங்கா ரணத்தைக்
குழகனே யுரையென வினவப்
பற்றறு பரம னுமையவண் மகிழப்
பண்பொடு பகர்தன்மே யினனுல். ருஅ

வேறு

செய்யு நிட்டையைச் செப்பத் தெளிகிலா
தைய மாகவ கத்திற் கொளுமவ
னுய்யு முப்பதி னுறும் பவத்தினில்
வைய நீங்கியே மன்னுவன் முத்தியில். ருகூ

உண்மை நிட்டரு முண்டென் றுளத்திடைத்
திண்மை யாகநற் சிந்தனை செய்பவ
னண்மை முப்பத்தி னுலாம் பவத்தினில்
வண்மை யாகமெய் முத்தியின் மண்ணுவான். சூ0

ஞான நிட்ட னிருக்குமந் நாட்டினின்
மோன வார்த்தை மொழியவே கேட்டவன்
றூனு முப்பதா மாகந் தவத்தினு
லான முத்திப் பதத்தை யடைவனுல். சூக

செப்பு நிட்டா பருக்குச் சிந்தையா
லொப்பின் மாட மொடுக்கமுஞ் செய்பவ
னிப்பு விக்க ணிருபத்தெட் டாம்பவந்
தப்பி லாதமெய்ம் முத்தியைச் சாருமால். கூஉ

ஞான நிட்டா பருக்கு நாடொறும்
போன மாதி பொருந்த வுதவுவோ
னீன மில்லா விருபத்தைந் தாம்பவ
மான முத்தியை மன்னுத றிண்ணமே. கூஙு

நிட்டை மேவு நிருமல யோகியர்
கட்ட வேநற் கலைக ளுதவுவோ
னிட்ட மாயிரு பத்திரண் டாம்பவ
மெட்ட ரும்பத மெய்துவ துண்மையே. கூச

சாத லைக்குண் முயலுந் தகைமையோர்
பாத முச்சிப் படியப் பணிபவ
ரோது மங்க மொருப திரட்டியிற்
றீதில் வீடு பெறுவது திண்ணமே. கூரு

ஒப்பி லாதநல் லுண்மைநிட் டார்கையிற்
செப்பு தாரணஞ் செய்துகொள் கிற்பவன்
றப்பி லோர்பதி னாறுந் தனுவினி
லெய்ப்பின் முத்தியை யெய்துவ துண்மையே.

சாற்று நிட்டையைச் சார்ந்தமெய்ஞ் ஞானிபா
லாற்று நற்பணி யன்பொடு செய்பவ
னேற்று மீரா றியன்ற தனுவினிற்
போற்றும் வீடு பொருந்துவ துண்மையே. கூஎ

ஓது சாதனை யுற்றவர் சேவடிச்
சீத நீரொடு சேடமு மார்பவன்
றீதி லெட்டாந் தனுவிற் றிகழ்தரு
மேதின் மெய்வீ டெய்து மினிதரோ கூஅ

மன்னும் யோக மருவுவோர் தேகமு
நன்ன யம்பெறு பாத நளினமும்
பின்ன மின்றிப் பிடித்தேவல் செய்பவர்
மன்னு மைந்தாம் பவத்தில்வீ டெய்துவார். கூகூ

ஒப்பி லாதுய ருண்மைநிட் டார்தமக்
கப்போ டன்னமு மர்ச்சித் துதவியே
தப்பி லேவலுந் தாஞ்செயும் புண்ணியர்க்
கெய்ப்பின் முத்தி யெடுக்கும் பவத்தினே. எO

வேறு

இந்நி லைத்திருப் பணியெலாஞ் செய்பவர்க் கிசைய
வந்நி லைப்பர குருவருள் சுரந்தினி தாக
வுன்னு தற்கரு மொருமொழி யருளினு லுதவித்
தன்னி லைப்பர நிட்டையி லிருத்துவன் றயையால்.

வேறு

இப்படி யாய நிட்டைசா தனையி
லிசைந்தினி திருப்பவர் தாமு
மொப்பரும் பூசை யொழித்திட வேண்டு
மெனவுமைக் கிறையவ னுரைப்ப

வப்படி யாமே லவனியோ ரெல்லா
மருச்சனை விடுகுவ ரேயென்
றிப்படி யிசைத்தா ளுமையவ டானு
மிணையிலா விறைவனை நோக்கி. எஉ

அத்தனு மொழிவா னிட்டைசா தகரர்ச்
சனையென வறைவதே பூசை
கைத்தலத் தமரு முடையவன் றனக்குக்
கனகுரு பாதநீ ராட்டிச்
சுத்தமா கியவெண் ணீறணிந் ததனுற்
சோடச பூசையுஞ் செய்தே
யித்திறம் புரித லேயவர் பூசை
யெனவிறை வியம்பின னெடுத்தே. எ௩

இப்படி நிட்டர் பூசனை புரித
லியல்பதா மிவ்வித பூசை
செப்பிடுங் கன்ம காண்டியுங் கிரியா
காண்டியுஞ் செய்யொணு தவர்க
டிப்பிய சைவா கமவிதிப் படியே
செய்யவேண் டுடுதலே யியல்பா
மிப்படி யன்றிச் செய்யொணு தென்றே
யிறையுமைக் கியம்பின னிசைய. எ௪

இப்படி நிட்டை தன்னிலே யிருந்து
மியல்பொடுந் தன்னனு பவத்தை
யொப்பிலா வரசர்க் கமைச்சுரைப் பதுபோ
லுயர்குரு பரர்க்குரைத் தளவின்

மெய்ப்படு குரவன் பின்னிகழ் வதனை
விளம்பிடக் கேட்டறி குநரே
யொப்பின்மா யோக ரலாதவர் கிரியா
காண்டியென் றுரைத்திடப் படுமால். ௭௫

உன்னரு ஞான நிட்டையை யடிக
ளுரைத்திடக் கேட்டுள மகிழ்ந்தேன்
பன்னருங் கிரியா யோகமென் றுரைக்கப்
படுவதை யெனக்குநீ விரித்தே
நன்னய மாக வுரைத்திட வேண்டு
மென்றுமை நாதனை வணங்க
வின்னமு தொழுக்குங் கதிரணி சடையோ
னிறைவியைப் பார்த்தினி துரைப்பான். ௭௬

வேறு

பங்கமுற மனங்கொண்டு சுவாசந் தன்னைப்
பந்தனஞ்செய் தருங்கற்பம் பலவ யின்றே
யங்கமதைத் தான்சுழற்றி யபானவழி தன்னா
லயம்வாங்கி யவ்வழியா லதைமீள விடுத்து
மிங்கிவைகள் பலவியற்ற லட்டமா யோக
மென்பரிவை சிவயோக மியற்றுவோர்க்கிலையாற்
றங்குசிவ யோகத்தா லாக்கமுட னழிவுந்
தானிலாப் பரமசா யுச்சியந்தா மடைவார். ௭௭

வேறு

புத்திகொள் கிரியா யோகசா தனையைப்
புரிந்திடு பவர்களிவ் வுலகி
லெத்தனை கால மிருப்பினு மீண்டு
மிறப்பொடு பிறப்பினை யடைவார்

சத்திய மாக வறிதிநீ யிந்தத்
தனிச்சிவ யோகசா தனேயோர்க்
கித்தனே வயதிற் போதிப்ப தென்றே
யிறையவ னுமைதனக் கிசைத்தான். எஅ

இந்தநன் னிட்டை யேழுநான் காண்டி
லியம்புத லுத்தம மாகு
முந்திய வையா றுண்டினி லாசான்
மொழிகுதன் மத்திம மாகு
மந்தமி லாறு றுண்டினிற் புகற
லறைதரு கனிட்டம தாமா
லுந்துமிப் பருவங் கடந்தவர்க் கதனே
யுரைத்திடத் தகாதென வுணரே. எகூ

வேறு

ஞான நிட்டையை நல்குநற் றேசிகன்
மான முற்றிடு மானிட னல்லனேல்
வான முற்று வளர்கயி லேப்பரன்
றனே னத்தினஞ் சாற்றிட லாகுமால். அ0

வேறு

வேணியுறை நதிமதியு நுதல்விழியுங் களவிடமு
மேனி யெங்கும்
பூணுமணி யங்கதமுங் கரியுரியு மலேமாதும்
புயங்க ளுன்கும்
பாணியுறை மழுமானும் பதநகஞ்சேர் மாமணியும்
பலவு மற்று
மாணமறைத் திவ்வுலகின் மானிடர்தம் பிறப்பறுக்க
மனத்தி லுன்னி. அக

திருச்சடையு நுதலிலிடு புண்டரமுங் கண்டமதிற்
றிகழு மார்பி
லுருத்திரான் மணியணியுஞ் சிவலிங்க தாரணமு
மொளிரக் கற்றோ
யருத்திகொளுந் தூசணிந்து வெண்டுகிற்கோ வணவுடையு
மரையிற் சாத்திக்
கரத்திலகு புத்தகமு மழகுறுசின் முத்திரையுங்
காட்டி யேதான். அஉ

தெண்டிடுனுடு பலியேற்கைப் பாத்திரமும் விளங்கவே
செய்ய நாவி
லெண்டிகழுஞ் செழுத்திலகச் சரணத்திற் பாதுகையு
மிலங்க வேதான்
மண்டிமிரு வினையொப்பு மலபரிபா கமும்வந்த
மாணர் சூழ
வண்டர்பிரான் றிருவருளே யொருவடிவ மாகவெழுந்
தருளி னுனல். அங

வேறு

தேசிக வுருவ மாகவந் துலகிற்
சீவர்கள் பக்குவந் தெரிந்தே
யாசிலா தவருக் கொருமொழி மோன
வுண்மையை யருளினு னுரைத்து
மேசிலா ஞான நிட்டையி லிருத்தி
யெய்தரு முத்தியை யுதவன்
மாசிலா மணியா யொளிர்தரு கருணை
வள்ளனற் றேசிகன் கடனே. அச

மறையவர்க் கிருப தாண்டினு முலகாண்
மன்னருக் கொருபதோ டைந்து
நிறைதரு வசியர்க் கொருபதாண் டினுஞ்சொன்
னிகரறு சூத்திரர்க் கைந்திற்
பொறைதரு பருவ முடையவர்க் கொன்றி
லிரண்டொன்றிற் பாதியிற் போத
மறைகுத லாகு நல்லுப தேச
மாரியன் றனதுள மகிழ்ந்தே. அரு

உடற்குயிர் போலுங் கட்கிமை போலு
மூகியு மூலமே போலும்
படப்பொறி யரவைப் பிடியெனப் பிடிக்கப்
பாயுவெம் புலிதனைத் தழுவத்
தொடற்கருந் தழலை யெடுவென வெடுக்கத்
தும்பிமுன் னஞ்சுறு திருக்க
விடற்கருஞ் சித்த மென்னவே யுதவும்
விவேகிகட் களித்திட லாமால். அசு

வேறு

தேனிரம்பு மலரையளி தேடுவபோ லெங்குந்
தேசிகனைப் பலநாளுந் தேடிக்கண் டளவின்
ஞானகுரு விவன்பாகஞ் சோதிக்க வேண்டி
நடுக்கங்க ளுறவேயெந் நாளுஞ்செய் வித்து
மீனமாந் தொழிலதனி லேவிமிக விடுத்து
மிரக்கமிலா தேயடித்து மிழிபுரையால் வைது
மானமின்றிச் செயும்போதுங் குருபத்தி வழுவா
வாய்மையருக் குயர்நிட்டை வழுத்திடலுந் தகுமால்.

## வாழி

திருவளர் கோவல் வீரட்ட நாதர்
திருவடிக் கமலங்கள் வாழி
பெரியநா யகிபொற் கழலிணை வாழி
பெரியமா கணபதி வாழி
முருகனற் பதங்கள் வாழிநந் தீசர்
முளரிநற் பதங்களும் வாழி
பெரியசம் பந்த ராதியா நான்கு
பெரியர்த மடிகளும் வாழி. அஅ

வசவணர் பதங்கள் வாழிமா சென்ன
வசவணர் பதங்களும் வாழி
திசையுளார் வலஞ்சூழ் குகைநம சிவாய
தேசிக னடிகளும் வாழி
நசையுறு மவர்பாற் குருநம சிவாய
நற்பர னடிகளும் வாழி
யசைவுறு மனத்தை யறிவினி லடக்கு
மடியர்த மடிகளும் வாழி. அகூ

### நூற்பயன்

பாவனா தீத நிட்டானு பூதி
பரசிவ னுமைதனக் கருளத்
தேவியு மகிழ்ந்த வடமொழி யதனைச்
செஞ்சடைப் பிரான்றிரு வுருவாங்
கோவல்வா ழாறு முகசிவ ஞான
குருபரன் றமிழினு லுரைக்கு
மேவுநற் பயனை யுணர்ந்துசா தித்தோர்
மேன்மைவீ டடைவது நிசமே. கூ0

---

## வாழி

கோவல்வீ ரட்ட ரனுக்கிர கித்துக்
கொடுத்திடு மாகமம் வாழி
பாவனைக் கரிதாம் பரகதி யடையப்
பகருமோர் சொற்பொருள் வாழி
நாவலந் தீவோ ரகத்திரு ளிரிய
நற்சிவா தித்தனய் வந்த
தேவனு மாறு முகசிவ ஞான
தேசிக னடிகளும் வாழி. கூக

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் திருவடி வாழ்க



உ

சிவமயம்

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன்
திருவடி வாழ்க

# நிட்டானுபூதிசாரம்

## இந்நிலையாகிய என்னும் 46 செய்யுள் உரை

—ம—

இந்நிலையாகிய—இருவினை யொப்பு மலபரிபாகத்திற் சத்திநிபாதப் பருவமென்னுஞ் சாதன சதுட்டய சம்பன்னராய் விளங்கும் நற்றவ முடையார்க்கு, பரசிவம் அருண்மேனி சாத்திவரும் ஞானகுரு போதனையால் பூதமுதல் நாதமீறான பந்தநிவிர்த்தியாகிய மோக்ஷ நிச்சயவறிவு பெற்றபின், அனுபவமாதற்குக் கேவலசகலம் அடாமல் திருவருளென்னும் உளக்கண் விளங்குதற்கு உபாயம் மோன நிலையினில் நின்றருளும் ஞானகுரு காருண்ணியத்தால் திருவடிகளை மாணுக்கன் சிரத்தில் சூட்டியத்தமத்தக சையோகத்துடனே பார்த்து நினைத்து விபூதியினுற் பரிசித்து இருந்தபடியிருந்து காட்டிய அந்நிலையில் மனோலயமாய் இராமலிருக்கும் உண்மை நெறிநிலையாகிய,

**பரம கேவலத்தில் நாளும் எழில் நிதித்தியாசனத்தில் இராமல் இருந்திடுவோன்**—முள் தராசுபோல் கீழ்முள் என்னுஞ் சீவாத்மா மயக்க விகற்பத்தில் தாழ்வு உயர்வு உறாமல் அசைவறச் சமமாகுஞ் சமாதியில் நின்று மேல்முள் என்னுந் திருவருளாகிய பரமாத்மாவைப் பிரியாதிருந்து பரம கேவலம் என்று நாடொறுஞ் சாதனை செய்யும் உண்மை நெறி அழகு மேலிடும் நிதித்தியாசனத்தில் என்றும் இராமல் இருந்திடுவோன்.

**அந்நிலேயே உடலினேடு சீவன்முத்தி அடைவன்**—திருவருளைப் பிரியாதிருக்கும் சீவன் உடம்போடிருக்கும்போதே பந்தநீங்கி நிச்சயஞானப்படி முத்தியை அடைவன்,

**அதுவும் எவ்விதம் என்னில் அறைகுதும் நீகேளாய்**—அஃது எப்படியெனின் சொல்லுவம் நீ கேள்,

**துன்னிய தோயத்தினேடு தோயம் உறல்போலும்**—ஒப்பு உயர்வு இல்லாது உலகில் விளங்குங் கங்கையுடன் யமுனை, சரசுவதி மற்றுமுள அநேக நதிகள் கூடிவரின் இரண்டற்று ஏகமாகிக் கங்கையெனும் பெயரே விளங்குதல் போலும்,

**சுவைதரு க்ஷீரத்தினேடு க்ஷீரம்போற் கலந்து**—குருபரங்களின் இதயம் சிவபூசை சிவநிவேதனத்துக்கு அன்போங்கும் வல்லீற்றுவின் முதிர்ந்த கன்று ஊட்டி மிகுந்த பாலுடன் இளங்கன்று ஊட்டும் ஆவின்பால் சேரின் இரண்டற்று ஏக சுவை ஆனதுபோலும் கலந்து, (அப்பாலினுள் நெய் பிரயாசையால் தோன்றி அபிடேகாதிக்கு அதிகபலன் என்னும் அதிக அர்த்தம் இருப்பது.)

**எந்நிலேயுந் தோன்றமல் இருந்திட**—சப்தாதி விடயங்களில் அழுந்து நிலைகள் தோன்றுமல் சீவாத்மா பரமாத்மா என்னுந் திருவருளில் அடங்கி இருந்திட,

**இவ்வுலகின் இறப்பினேடு பிறப்பும் அறுத்து**—இவ்வுலகில் இறப்பென்னும் கேவலத்தினையும் பிறப்பென்னும் சகலத்தினையும் போக்கி,

**இணையில் இன்பத்து ஒளிர்வான்**—அப்பரமாத்மாவுக்கு இருவாசனையும் நீங்கிச் சுத்த அறிவென்னும் ஞானநிட்டை சாதனையால் இந்தனத்துள் இருக்கும் அக்கினிகாணக் கடையும்போது இந்தனந் தோன்றுது அக்கினிப் பிரகாசமே விளங்குவது போல ஞானநிட்டை சாதனை என்னும் சுத்தமார்க்கத்தில் அருள்பரை என்னும் இரண்டுள் அருள் ஆன்மாவிற்குத் தோன்றலானும் பரை ஆன்மாவிற்குத் தோன்றுமற்றோன்றலானும் ஆநந்தமளவும் ஆன்மாவால் ஆநந்தங் கூறலானும் ஆநந்தாதீதத்தனுபவம் கூறெணுது என்பதே ஆன்ம

போத நஷ்டம். அதுவே தத்வமசி மஹா வாக்கியார்த்த அனுபவம். அந்த மகா வாக்கியத்தை உணர்த்துங் காலம் த்வம் தத் அசி என்பர். அதன்பொருள் அது நீ ஆனாய் என்றதை நீ அது ஆனாய் என்றல். ஆகையால், த்வம் பத சுத்தார்த்தமான பரமாத்மாவாகிய அருளென்னுஞ் சித்தே நிசாங்கம்; அந்த நிசாங்கத்தில் தத்பத சுத்தார்த்தமான பரமென்னுஞ் சித்களானந்தமே நிசலிங்கம்; அந்த நிசலிங்கத்துக்கு ஆத்மார்ப்பணமானதே அசிபதத்திற் சித்களானந்தாதீத சம்பந்தம் என்றும் நிசப்த சுவயம்பிரகாச நிரவஸ்தா நிஷ்பத்தி என்றும் கூறும் நிர்ப்பாவ நிசலிங்கைக்கிய சிவாத்வைத பக்தியில் விளங்குவன் (பிரமாணம்) இருவினை யொப்பு என்றதற்கு,

**சருவஞானோத்தரம்**—"அருள்செறியு மோட்சகா ரணமாக விளங்கு மத்துவித பாவனையா வர்க்குவரு மென்னிற், சரியை கிரி யாயோகங் களைச்செனனாந் தத்துத் தக்கஅநுட் டானஞ் செய் ததனல்நின் மலனாய்த், தெரிசிவசாத் திரங்களையே கேட்டுச்சிந் தித்துத் தெளிந்துகன்ம வொப்புமல பரிபாகம் வந்தாற், பெரியஅத்து விதஞானம் வருமிவ்வா றன்றிப் பெத்தர்க்கு விளங்காது விளக்கினும்வா ராதே." சத்தினிப்பாதப்பருவர் என்னுஞ் சாதன சதுட்டய சம்பன்னர் என்றதற்கு,

**அறிவானந்த சித்தியார்**—"நித்தியா நித்திய வத்து விவேக நிலையறிந்து, வித்தா மிகமுத்தி ரார்த்தபோ கத்தில்வி ராகமுற, வொத்தாஞ் சமதம மாதிசம் பத்தியிங் குற்றடக்கிச், சத்தாமு முட்சுத் துவமெய்தல் பக்குவர் சாதனமே"—நற்றவமுளரென்றதற்கு— "நற்றவந் தன்னைப் பொருந்திமெய்ஞ் ஞானமும் நாடியிட, வுற்றவர் இந்தச் சகந்தனில் வாழ்வு முறக்கருத்திற், பற்றி யிடாதவர் போலப்பற் றற்றுப் பரமகுரு, மற்றுமோர் தெய்வமுண் டென்னார்கள் பக்குவம் வாய்த்தவரே." சிவம் அருள்மேனி சாத்திவரும் என்றதற்கு,

**சிவாநந்த மாலை**—"சின்மயனார் சீரூர் திருமேனி கொண்டவரு, மென்மனமே செப்பக்கேள் ஈன்றதாய்—தன்மகன்

ளூன், மேவுகிணற் றுள்வீழ மெய்யான நேசத்தக், கூவமுள் வீழ் தாய்போற் குறி."

பூதாதி நிவர்த்தியாகிய நிச்சய அறிவு என்றதற்கு—"விரிந்தவசுத் தங்கடந்து மேலசுத்தா சுத்தந், தெரிந்து மிகு சுத்தத் ததீதத்—திருந்தபொருள், அன்றிவே றொன்றை யறியா திலகுமரு ளன்றியே யொன்றுமறி யேன்." "தற்காண் டல் சாக்கிரமாந் தற்பரையே சொற்பனமாந், தற்காணு வெட்ட வெறுந் தற்பரையே—நற்சுழுத்தி, ஞானந் தந்துரிய ஞான சுகா தீதத்திற், றூனை தின்பவத் தம்"

பார்த்து நினைத்துப் பரிசித்து என்றதற்கு—"காண வொணு ஆணவத்தை மாயையொடு கன்மத்தை, மாணகுரு மாய்க்கும் வகைவகுக்கிற்—பாணியின்மீ, ஞைம பறவையெனப் பார்த்துமகத் துள்ளடைத்துந், தூமலர்க்கை யாற்பரிசித் தும்." குகைநமசிவாய தேவர் திருவாக்கு "பார்க்கும் நினைக்கும் பரி சிக்குந் தன்குஞ்சை, யேர்க்குமீ ஞைம யிரும்பறவை—காக் கும்போ, தம்மை யடைந்தாரைத் தாபரிக்குஞ் சோணேசன், தம்மையடைந் தார்நீதி தான்" இருந்தபடி இருந்து காட்டியது என்பதற்கு,

திருவிளையாடல்— "கல்லாலின் புடையமர்ந்து நான் மறைஆறங்கமுதல் கற்ற கேள்வி, வல்லார்கள் நால்வருக்கும் வாக் கிறந்த பூரணமாய் மறைக்கப் பாலாய், எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி யிருந்து காட்டிச், சொல்லாமற் சொன்னவரை நினையாமல் நினைந்துபவத் தொடக்கை வெல் வாம்." பரம கேவலம் என்றதற்கு,

மோகவதைப் பரணி—"ஆங்குணரா மையும்உணர்வு மாகியகோ ளறவிருந்து, தூங்கினர்காண் சுகமடைவர் சும் மேலோ சும்முலக்காய்" முட்டராசுபோல் என்றதற்கு,

ஒழிவிலொடுக்கம்—"அறிவா யிரீர்மயக்க மாகா தசையில், விறிசாய் விடாதோ விகற்பம்—பிறியாத், தராசின் றுனிபோற்

சமாதிவரின் ஞான, இராசனுமக் கொப்பா ரெவர்" சுத்த சித்தாந்தத் தாலாட்டு. "தராசி னிலேபோலச் சமமுற் றசையாயேற் பராநந்த மக்கணமே படருமுள் ளென்றவரோ." உடலினொடு சீவன் முக்தியடைவன் என்றதற்கு,

தேவி காலோத்தரம்—"உடம்பி ரண்டு முயிர்ப்புட னுள்ள மும், மடம்ப டும்அகங் காரமும் புந்தியும், திடம்ப டத்தனில் வேறெனச் சிந்திப்பார்க், குடம்பிலா ஞான உள்ளொளி யுள்ளூறும்." சருவ ஞானோத்தரம். "கடத்திருக்கு மாகாயம் போலச் சீ வான்மா கருதுமகா காயம்போற் பரமான்மா விருக்கும், கடத்திருக்கு மாகாயங் கடமுடைந்தால் முன்னர்க் கருதுமகா காயமா நிறைந்துநின்மூற் போலத், திடத்தினுறு பிரகிருதி சம்பந்த மாய தேகவுபா திகள்முழுது நீங்கியபோ தந்தச், சடத்தமர்சீ வான்மாவே பரமான்மா வாகுஞ் சர்வஞ்ஞனெம்மாற் சொலப்பட்ட திதுவே."

சீவன் முத்தர் சிவபூஜை செய்தற்கு,

ஆசைச் சோடசமாலை—"தற்போத முள்ள மட்டுஞ் சம்போவுன் சொற்ப டிக்கு, அப்போடாக் கவிய மாதி அபிடே கார்ச் சனையும் மற்றுஞ், செப்பாமற் செப்பும் ஞானச் சிவாநந்தா தீத மாகற், கப்பாவுன் அருள்வ சத்துக் கண்ணலே ஆசைப்பட்டேன்." சிவாத்வைதக் கும்மி. "அத்துவித சித்தியான உமை நந்தியாதி பிரமத கணமுனிவர் மற்றுமுள்ளோருஞ் சிவார்ச் சனையால் நிசமா முத்தி பெற்றாரெனக் கும்மியடி." தோயமாதி சிவார்ச்சனை செய்தற்கு,

ஆகமவசனார்த்தச் செய்யுள்—"மருவுசிவ பூசையினில் நீங்கும் கன்ம மஞ்சனத்துக் கொருபதுவா மான்பா னூறுந், தருதயிருக் காயிரமாந் தேன்அதனிற் பத்தாஞ் சாத்தியிடு நெய்க்குநூ றுயிரம்போம் பாவம், பருகருப்பஞ் சாறபிடே கந்த னக்கு பத்துநூ—றுயிரம்போம் பாவமென்னும் ஒருமையொடு சந்தனத்தின் குழம்பு சாத்த உறுபயனுக் களை

லையென் ருே நூலே" எங்கிலையுந் தோன்ருமலிருந்திட என்பதற்கு,

ஒழிவிலொடுக்கம் "சத்தாதி தத்துவம்போய்த் தானு மெதி ருங்கழன்ருல், சித்தாந்த வேதாந்தச் சீர்மையிலை— முத்தி, அநிர்வசன மின்ப அதீதமெனில் ஆங்கே, பினமிடுதல் கன்மம்பி ளாய்." இவ்வுலகினில் இறப்பிஞெடு பிறப்பு மறுத்து என்றதற்கு,

திருக்குறள் "உறங்குவது போலுஞ் சாக்காடு உறங்கி, விழிப்பது போலும் பிறப்பு." அப்பரமாத்மாவுக்கு இருவாசனை யும் நீங்கி என்றதற்கு,

பட்டினத்தடிகள் திருப்பாடற்றிரட்டு "அறந்தா னியற் றும் அவனிலுங் கோடி அதிகமில்லந், துறந்தான் அவனிற் சதகோடி யுள்ளத் துறவுடையோன், மறந்தான் அறக்கற் றறிவோ டிருந்திரு வாதனையற், றிறந்தான் பெருமையை என் சொல்லு வேன்கச்சி ஏகம்பனே" சுத்த அறிவென்னும் ஞான கிட்டை சாதனையால் இந்தனத்துள்ளிருக்கும் அக்கினி கடை யப் பிரகாசிப்பதுபோல ஞானத்துள்ளிருக்கும் ஞானுநந்தம் பிரகாசிப்பது என்றதற்கு,

திருநாவுக்கரசு சுவாமிகள் தனித் திருக்குறுந்தொகை— "விறகிற் றீயினன் பாலிற்படு நெய்போல், மறைய நின்றுளன் மாமணிச் சோதியான், உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினுல், முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே."

ஒழிவிலொடுக்கம்—"உனையுணர்த்திற் பாச முதலி யுடையோன், தனையுணர்த்தி னீயே தலமாம்—கனலை, விற கிடமாய்க் காணில்அதன் வெம்மையையே ருக்கி, அறியகிலாப் போலதுநீ யாம்." பத்தத் தசையில் மலமாயா கன்மமென்னும் பந்தத்தால் தோற்ருதிருந்த ஆத்மா முக்தி தசையில் சுருதி குருபோதக சாதக சுவானுபவத்தால் அக்கினியும் சூடும் பிர காசமும் வெவ்வேருய்ப் பிரித்தறியக் கூடாததுபோல ஞான

மும் ஞானத்துள் இருக்கும் ஞானனந்தமும் ஆன்மபோத நட்டமான ஞானனந்தாதீதமுமே நீ அதுவானய் என்னுஞ் சுவானுபவ மார்க்கமாகிய தத்துவமசி மகா வாக்கியார்த்த மென்னும் நிசலிங்காங்க சம்பந்தமாக விளங்குஞ் சுத்த நிராபார வீர சைவ சமரசானுபவ சிவாத்வைத பத்தி என்றறிக.

இவ்வுரை இரண்டாமுறை சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் திருவாய் மலர்ந்தது.



சிவமயம்

# சில சொற்பொருள் முதலியன.



1. விநாயகரை வழிபட்டோர் போக மோக்ஷங்களைப் பெறுவரென்பதை விளக்குவார் "சித்தி திருவொடு முத்தி பெறுவரே" என்றார்.

2. சுரநதி - தேவகங்கை. கரம் - கிரணம்; குறைமதி என்றும் பாடம். வார் - கச்சு. குயம் - தனம். வனிதை - பெண்களுட் சிறந்தாள். வாரியுண்ட கார் - நீருண்ட மேகம். இந்நூலாசிரியர் வதிந்த திருக்கோவலூர்ப் பெருமானது திருநாமம் வீரட்டேசுரர் என்பது.

3. அளவைக்கரிய நாயகி என மாற்றுக. உபயம் - இரண்டு. தல அம்மையார் பெயர் பெரியநாயகி.

4. அயன்மாலுக் கரியானை எனவும், அன்பிலர் தம் தேக மனவாக்கதனுக்குத் தெரியானை எனவும், அன்பர் தமக்கு உரியானை எனவும் அந்நுவயப்படுத்திப் பொருள் கொள்க. தல விநாயகர் பெயர் பெரியானைக் கணபதி. பிறங்கிய - விளங்கிய.

5. கிரி - கிரௌஞ்ச மலை. உரம் - மார்பு. வலாரி - இந்திரன். மகம் - யாகம். விபுதர் - தேவர்கள். அடல் - வன்மை. கெழு - பொருந்திய.

6. சஞ்சிதங்கள் - பல பிறவிகளிலும் ஈட்டப்பட்டுக்கிடந்த புண்ணிய பாவங்கள். மும்மலம் - ஆணவம், கன்மம், மாயை பாற - ஓட. ஆதித்தன் - சூரியன். இந்தியம் - இந்திரியம். நளினம் - தாமரை. உதய காலத்தில் சஞ்சிதங்கள் தீர்தல் முதலிய பயன்பெறக் கருதி நந்தியாம் இறைவனை வழிபட்டு இன்ப வாரிதியின் மூழ்குக என்பது கருத்து. கடலில் மூழ்கும் விதியை ஞாபகப்படுத்தியதும் ஆம்.

7. சுவர்க்கம் - தனம்.

8. நீவ - நீங்க.

ஆறு அங்கம்:—பக்த ஸ்தலம், மகேசஸ்தலம், பிரசாதி ஸ்தலம், பிராணலிங்கி ஸ்தலம், சரண ஸ்தலம், ஐக்ய ஸ்தலம்.

ஆறுலிங்கம் :—ஆசாரலிங்கம், குருலிங்கம், சிவலிங்கம், சங்கம லிங்கம், பிரசாதலிங்கம், மகாலிங்கம்.

ஆறுகலை :—நிவர்த்தி கலை, பிரதிஷ்டாகலை, வித்தியா கலை, சாந்திகலை, சாந்தியதீதா கலை, சாந்தியதீதோத்ரா கலை.

ஆறுமுகம் :—சத்தியோஜாத முகம், வாமதேவ முகம், அகோரமுகம், தத்புருஷமுகம், ஈசான முகம், பாவநா முகம் (அதோமுகம்).

ஆறு சாதாக்கியம் :—மூர்த்தி சாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், கர்த்ரு சாதாக்கியம், கர்ம சாதாக்கியம், சிவ சாதாக்கியம், மஹா சாதாக்கியம்.

ஆறுபக்தி :—சத்பக்தி, நைஷ்டா பக்தி, அவதான பக்தி, அனுபவபக்தி, ஆனந்த பக்தி, சமரச பக்தி.

ஆறு அத்தம் :—சுசித்தம், சுபுத்தி, நிராங்காரம், சுமநம், சுஞ்ஞானம், சத்பாவம்.

ஆறு சக்தி :—கிரியா சக்தி, ஞான சக்தி, இச்சா சக்தி, ஆதி சக்தி, பரா சக்தி, சித் சக்தி.

9. இன்னமயம் நீங்கிய எனவும் பாடம். இசைந்து - பொருந்தி. பண்ணவர் - தேவர்.

10. பனுவல் அவர்மீதும். தாலம் - உலகு.

11. ஐந்து சுத்தி :—ஆன்மசுத்தி, தானசுத்தி, திரவிய சுத்தி, மந்திரசுத்தி, லிங்கசுத்தி.

நீசி - பிரமோத்ர காண்டத்தில் 3 அத்யாயம் சிவராத்திரி மான்மியத்தில் குறிப்பிடும் சௌமினி யென்னும் பிராமணப் பெண்ணை முன்னைப் பிறவியிலிருந்தவள். கூவிளம் - வில்வம்.

12. க்ஷீரவாரிதி - பாற்கடல். 'கௌரவும்' எனவும் பாடம். வாருங்கோள் பாருங்கோள் தீருங்கோள் எனவும் பாடம். (சிந்தாமணி காந்தருவதத்தை யாரிலம்பகம் 782 செய்யுளின்

முதலடியில் வம்மின் என்பதற்கு வாருங்கோள் எனும் உரையைக் கவனிக்க) நிகழ்த்தல்-சொல்லல்.அண்ணல் மொழிப்படி - இறைவன் இறைவிக் கியம்பியவாறே.

13. உத்தரவாதுளம் - வாதுளம் என்னும் மூலாகமத்தின் பன்னிரண்டு பிரிவுகளிலொன்று. அத்தை - விரித்தல் விகாரம். அதனை என்பது பொருள்.

14. சாதனை - சாதனம். நிகழ்த்து - சொல்லுக. வித்தகி - ஞானவடிவினளே. சாவதானமாய் - கவனத்தொடு கூடி. கேட்டி - கேள்.

17. கட்டு - பாசம். உயிர் பொருட் சார்பு - உயிர்ச் சார்பு பொருட் சார்பு. ஒட்டு - சம்பந்தம். சகல கேவலங்கள் என்றது ஈண்டு அவற்றின் காரியமாகிய பத்து அவத்தைகளை.

18. வித்தகமாக - சாமர்த்தியமாக. கசடு - குற்றம்.

19. மெத்து - மிகுந்த. இத்தை - இதனை.

21. கந்து - கட்டுத்தறியை. அடு - முறிக்கிற. புறங்காண் - வெல்லும். கவான் - துடை.

22. கலையின் உரிவை - மான்தோல். உழுவை - புலி. அதள் - தோல். குசை - தருப்பை.

23. களம் - கழுத்து. வயம் - பலம். நிறீஇ - நிறுத்தி.

24. கவிசனை - உறை. விரகு + அது, விரகு குறிப்புப் பொருளது. பவனன் - காற்று. வளி - காற்று.

26. அலைவு - அலைதலை. பொன்று - அழியாத.

27. சொல்விளம்பி - கள்.

30. உலையா - அழியாத. உன்னுது - எண்ணுது.

31. வாயுதாரணை - பிராணுயாமம்.

32. கேவலம் - மறப்பு.

35. என்போல் இருந்தானே இருந்தான் - என்போல் இருந்தவனே இருந்தவன்.

36. அருந்து - உண்ணும். போனகம் - உணவு. அருந்தல் புரிக - உண்ணுக. பரிந்து - ஆசைப்பட்டு. பரிசு - தன்மை.

37. வளை - சங்கு. அளி - வண்டு. தசநாதங்களை இதனின் சிறிது விகற்பித்துக் கூறுதலும் உண்டு. உரவோர் - ஞானிகள்.

39. துன்னிய-நெருங்கிய. காரணமாமனு - காரண பஞ்சாக்ஷரம். பெட்பு - பிரியம்.

40. உஞற்றுவரேல் - செய்வரேல். உந்தும் - செலுத்தும்.

41. இனன் - சூரியன். வயங்குவபோல - விளங்குவபோல. புகறி - சொல்.

42. இலங்கிய - விளங்கிய.

43. நீசம் - தாழ்வு. உய்த்து - செலுத்தி. ஆசு - குற்றம்.

44. சடம் - சரீரம். தகரம் - மயிற் சாந்து, நகம் - மலை.

45. போகுமே எனினும் - போகுமாயினும்.

46. இச் செய்யுளுரை இந்நூலின் 1-ம் பக்கத்தில் உள்ளது.

49. பால் - பக்கம்.

51. மன - நிலைபெற (விகாரம்). கரம் - கழுதை. அடரும் - நெருங்குகிற. ஞமலி - நாய்.

52. அவம் - வீண்.

56. துப்பு - வன்மை. துரிசு - குற்றம்.

57. வளமை - பொலிவு.

61. ஆகம் என்றது ஈண்டுப் பிறப்பை.

63. போனம் - உணவு (விகாரம்).

64. கலைகள் - துணிகள்.

65. அங்கம் என்றது ஈண்டுப் பிறப்பினை.

66. தாரணம் - லிங்கதாரணம். தனு என்றது ஈண்டுப் பிறப்பினை. எய்ப்பு - இளைப்பு.

68. சேவடிச் சீத நீர் - பாதோதகம். சேடம் - பாத்திர சேடம் பரிகல சேடம். ஆர்பவன் - உட்கொள்பவன்.

69. நளினம் - தாமரை.

70. அப்பு - சலம்.

72. அவனியோர் - உலகர்.

73. கனகுருபாத நீர் ஆட்டல் - வீர சைவ விதி. சோடச பூசை - சோடச உபசாரத்தோடு கூடிய பூசை.

74. திப்பியம் - திவ்வியம்.

76. கதிர் - சந்திரன்.

77. பங்கம் - பழுது. அயம் - நீர்.

79. கனிட்டம் - அதமம்.

81. களம் - கழுத்து. அங்கதம் - பாம்பு. பாணி - கை. மாண - மாட்சிமை பெற

82. கண்டமதில் உருத்திர நன்மணியும் திகழும் மார்பில் சிவலிங்க தாரணமும் என இயைக்க. கல் - காவிக்கல். அருத்தி-பிரியம். தூசு - உடை.

83. தெண்டு - கழி. பலியேல் கை பாத்திரம் - பிக்ஷை வாங்குகிற கையிலுள்ள பாத்திரம். இருவினை ஒப்பு - சுகதுக்கங்களில் சமபுத்தி. மலபரிபாகம் - மலம் தனது சத்தி தேய்தற்குரிய துணைக்காரணங்க ளெல்லாவற்றோடுங் கூடுதல். மாணர் - சீடர். திட்டையில் இயைந்தும் எனவும் பாடம்.

85. பொறைதரு - தாங்கிய. போதம் - ஞானம்.

86. பொறி - புள்ளி. தும்பி - யானை.

87. அளி - வண்டு.

88. முளரி தாமரை.

89. நசை - அன்பு.

91. கோவல் வீரட்டர் அனுக்ரகித்துக் கொடுத்திடும் ஆகமம் - சிட்டானுபூதி. சிவாதித்தன் - சிவசூரியன்.

# செய்யுளகராதி



எண்கள் செய்யுளெண்கள்